[24th September 1958

SRI N. K. PALANISAMI : நாகப்பட்டிணத்தில், அக்காரப் பேட்டை முதலிய 8 குப்பங்கள் இருக்கின்றன. அக்காரப் பேட்டைக்கு ஒரு பாப்லோ போட் கொடுக்கப்பட்டிருக்கிறது. மாதம் ரூபாய் 500 வருமானம் என்றும் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனாலும், 8 குப்பத்தி திற்கும், ஒரு போட்டுதான். ஆகவே, குப்பத்திற்கு இரண்டு வீதம் கொடுக்க சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : ஸ்டேட் முழுதுமே 42 போட்டுகள்தான் இருக்கின்றன. ஒவ்வொரு குப்பத்திற்கும் ஒன்று என்று கொடுத்துவிட்டால், மற்ற இடங்களின் கதி என்னுகும் ?

SRI A. VEDARATHNAM : நாகையில் விசைப் படகுகளை நடத்த பயிற்சி நடப்பதாகக் காண்கிறோம். அப்படி எத்தனை மாணவர்கள், பயிற்சி பெறுகிறார்கள், அவர்களுக்குப் பயிற்சிக்குக் கட்டணம் ஏதாவது உண்டா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அவர் களில் இந்த வருடம் பத்துப் பேர்கள் இருக்கிறார்கள். அவர்கள் மீனவர் சமுதாயத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்.

### *Home Science and Citizenship Training Centre*

* 490 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை ராஜ்யத்தில் எந்தெந்த இடங்களில் ஹோம் ஸைன்ஸ், குடிமைப் பயிற்சி நிலையங்கள் நடைபெறுகின்றன ?

(ஆ) இவை ஒவ்வொன்றுக்கும் ஆண்டுதோறும் ஆகும் நடை முறைச் செலவு எவ்வளவு, நிரந்தரச் செலவு எவ்வளவு ?

(இ) இதில் எவ்வளவு பேருக்குப் பயிற்சி அளிக்கப்படுகின்றது ?

(ஈ) எந்த ஜில்லாக்களிலிருந்து இந்த பயிற்சியாளர்கள் தேர்ந் தெடுக்கப்பட்டிருக்கின்றார்கள் ?

(உ) இவர்களின் தகுதி என்ன ?

(ஊ) அவர்களைத் தேர்ந்தெடுப்பவர்கள் யார் ?

(எ) இந்தச் செலவில் மத்திய சர்க்கார் பங்கு எவ்வளவு ?

(ஏ) இந்தப் பயிற்சி ஸ்தாபனங்களை அதிகரிக்கும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) *to* (*h*) A statement [a] is laid on the table of the House.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஹோம் ஸைன்ஸில் என்ன வேலைகள் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன என்பதை அமைச்சர் அவர்கள் விளக்குவார்களா ?

MR. SPEAKER : தனிக் கேள்வி போடுங்கள். கேள்வி நேரத்தில் இதற்கெல்லாம் பதில் சொல்ல முடியுமா ?

### *Maternity Home at Vedasandur*

* 491 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether a Maternity Home was constructed and finished on 1st April 1956 at Vedasandur, Madurai district ; and

(*b*) whether any doctor was posted for the Maternity Home?

THE HON SRI M. A. MANICKAVELU : (*a*) A Maternity Ward with four beds was constructed.

---

[a] Printed as Appendix III on page 666 infra.

(*b*) No, Sir. The Maternity Assistant attached to the Local Fund Dispensary is attending to cases under the supervision of the Medical Officer.

**SRI N. K. PALANISAMI** : இந்த ஆஸ்பத்திரி கட்டினது 1956-ல், 1958-ம் வருஷக் கடைசி வரை டாக்டர் போடவில்லை என்பது வாஸ்தவமா? அதற்குக் காரணம் என்ன ?

**THE HON. SRI M. A. MANICKAVELU** : இந்த ஆஸ்பத்திரி பஞ்சாயத்து போர்டு திட்டம். இதற்கு வேண்டிய வகை அவர்கள் செய்ய வில்லை. ஜில்லா போர்டும் அதற்கு வேண்டிய பணம் இல்லையென்று கையை விரித்து விட்டார்கள்.

**DR. SRIMATHI T. S. SOUNDARAM RAMACHANDRAN** : இந்த டிஸ்பென்சரியில் இருக்கும் மருத்துவப் பெண் வெளியில் சென்று உதவி செய்ய வேண்டியிருப்பதால், இந்த மெடர்னிடி ஹோமுக்குத் தனியாக ஒரு மெடர்னிடி அஸிஸ்டென்ட் நியமிக்க சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா?

**THE HON. SRI M. A. MANICKAVELU** : அது பஞ்சாயத்து ஜில்லா போர்டு ஆகியவற்றின் பொறுப்பு. ஜில்லா போர்டே பணம் இல்லை என்று கையைவிரித்துவிட்டது. சர்க்கார் ஆஸ்பத்திரிகளுக்கே அம்மாதிரியான வசதி செய்து கொடுக்கக் கஷ்டமாக இருக்கிறது.

*Untouchability*

* 492 *Q*.—**SRI V. K. KOTHANDARAMAN** : Will the Hon. the Minister for Public Works be pleased to state the number of cases of caste repression (cases in connection with temple entry and the like) launched in 1957–58 in the State districtwar; under the following Acts :—

(1) Temple Entry Authorization Act, 1948 (Madras Act XII of 1948) ;

(2) Untouchability (Offences) Act, 1955 (Central Act); and

(3) Civil Disabilities (Removal) Act, 1951 (Madras Act XIV of 1951)?

**THE HON. SRI P. KAKKAN** : A statement[a] is placed on the table of the House.

**SRI V. K. KOTHANDARAMAN** : ஸார், பாண்டிய நாட்டுப் பண்புக்கு உரிய முறையிலே, மதுரை மாவட்டத்தில் அதிகமான 23 தீண்டாமைக் கேசுகள் இருப்பதற்குக் காரணம், ஸ்ரீமான் தியாகராஜன் தினந்தோறும் எடுக்கும் தீவிர நடவடிக்கைதான் என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? (சிரிப்பு).

**MR. SPEAKER** : இம்மாதிரிக் கேள்வி போடுவது நல்லதல்ல. I think the Hon. Minister need not answer the question. If, however, he wants to answer, I have no objection.

**THE HON. SRI P. KAKKAN** : பாண்டிய நாட்டில் அதிகமான கேசுகள் இருப்பது அங்கே தீண்டாமையை ஒழிக்க அவர்கள் பாடு படுகிறார்கள் என்பதைத்தான் எடுத்துக் காட்டுகிறது.

**SRI N. R. THIAGARAJAN** : பாண்டிய நாட்டில் தீண்டாமை சம்பந்தமான வழக்குகள் அதிகமாக இருப்பதற்குக் காரணம், கனம் அமைச்சர் அவர்கள் சொன்னது போல், அங்கே நாங்கள் தீவிரமாக அந்தப்

---

a Printed as Appendix IV on page 667 infra.